மூர்த்தியாக நினைத்து அர்ச்சித்தல் வேண்டும். இதே முறைதான் ஸ்ரீதேவி, பூதேவிகளுக்கும், பரிவார தேவதைகளை யதா சௌகர்யம் பூஜிக்க வேண்டும்.

"अथावनीदं" इति प्रोक्ष्य, प्रमुखे मण्डलमुपलिप्य, हविःपात्रं सङ्गृह्य, अधिदेवमादित्यमभ्यर्च्य, संशोध्य "देवस्यत्वा", इति घृतेनाऽभिघार्य, गायत्रीं वैष्णवीं जपन् स्थाल्यां चतुर्भागं हित्वा, त्रिभागं हविःपात्रे प्रक्षिप्य, मण्डले निधाय, तस्मिन् हविषि, सुगन्धमुत्पूत गव्य घृत "देवस्य" इति आश्राव्य "अहमस्मि" इत्यभिमृश्य "तदस्यप्रियं" "सुभूस्स्वयंभूः" इति हविर्निवेदयेत् । देवीभ्यां स्नापनोत्सव बलिबेरेभ्यः निवेदयेत् ।

"அதாவனீதம்" இதி ப்ரோக்ஷ்ய, ப்ரமுகேமண்டலமுபலிப்ய, ஹவி: பாத்ரம் ஸங்க்ருஹ்ய, அதிதேவமாதித்யமப்யர்ச்ய, ஸம்சோத்ய, "தேவஸ்யத்வா" இதி க்ருதேனாऽபிகார்ய, காயத்ரீம் வைஷ்ணவீம் ஜபன் ஸ்தால்யாம் சதுர் பாகம் ஹித்வா, த்ரிபாகம் ஹவி: பாத்ரே ப்ரக்ஷிப்ய, மண்டலே நிதாய தஸ்மின் ஹவிஷிஸுகந்தமுத்பூதம் கவ்ய க்ருதம் "தேவஸ்ய" இதி ஆச்ராவ்ய "அஹமஸ்மி" இத்யபிம்ருச்ய "ததஸ்ய ப்ரியம்", "ஸுபூஸ்வயம்பூ:" இதி ஹவிர் நிவேதயேத். தேவீப்யாம் ஸ்நாபனோத்ஸவ பலிபேரேப்ய: நிவேதயேத்.

**பொருள் :** "அதாவனீதம்" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ப்ரோக்ஷிக்க வேண்டும். பகவானுக்கு முன்பாக ஸ்தல சுத்தி செய்து (மடைப் பள்ளிக்குச் சென்று) ஹவிர்நிவேதனப் பாத்திரத்தை சுத்தம் செய்து அதன் அதிதேவதையான சூர்யனை ஆவாஹனம் செய்து, "தேவஸ்யத்வா" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி நெய்யை விட்டு சுத்தம் செய்து, பிறகு காயத்ரியை ஜபித்து சமைத்த பாத்திரத்தில் உள்ள அன்னத்தை நான்கு பாக மாகப் பகிர்ந்து மூன்று பாகத்தை ஹவிர் நிவேதனப் பாத்திரத்தில் சேர்த்து எடுத்துவந்து எம்பெருமானுக்கு முன்னிலையில் சுத்தி செய்யப்பட்ட இடத்தில் வைத்து அந்த அன்னத்தில் நல்ல வாசனையுள்ள பசு நெய்யை "தேவஸ்ய" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி சேர்த்து, "அஹமஸ்மி" என்று தொடங்கும் அன்ன சூக்தத்தைச் சொல்லி அன்னத்தைத் தொட்டு, "ததஸ்ய ப்ரியம்", "ஸுபூஸ்வயம்பூ:" என்பதாகத் தொடங்கும் மந்த்ரங்களைக் கூறி ஹவிர் நிவேதனம் செய்ய வேண்டும். பிறகு ஸ்ரீதேவி, பூதேவிக்கும், ஸ்நபன, உத்ஸவ, பலி பேரங்களுக்கும் ஹவிர் நிவேதனம் செய்யவேண்டும்.

ब्रह्ममुत्कुटिकासनं वा आसीनः अग्निकुण्डे चुल्यां वा, अग्निं परिषिच्य, देवेशाय साज्यचरुं "अतो देवाद्यैः" मूर्तिमन्त्रैश्च जुहुयात् । देव्यादि तदालयगतपरिषद्देवेभ्यस्त्रिकाल जुहुयात् । उत्तमे प्रातर्मध्याह्नयोः देवेशाय, देवीभ्यां मुनिभ्यां ब्रह्मेशानाभ्यां, मध्यमे च एतेभ्यो मध्याह्न एव अधमे जुहुयात् । पुनश्चाग्निं परिषिच्य अशक्तः कुण्डादग्निं समिध्यारोप्य लौकिकाग्नौ निधाय जुहुयात् ।

ப்ரம்மமுத்குடிகாசனம் வா, ஆஸீன: அக்னி குண்டே சுல்யாம் வா, அக்னிம் பரிஷிச்ய தேவேசாய ஸாஜ்ய சரும் அதோதேவாத்யை:' மூர்த்தி மந்த்ரைச்ச ஜுஹுயாத் தேவ்யாதி ததாலயகத பரிஷத்தேவேப்ய: த்ரிகாலம் ஜுஹுயாத். உத்தமே ப்ராதர்மத்யான்னயோ: தேவேசாய, தேவிப்யாம் முனிப்யாம், ப்ரம்மேசாஸாப்யாம் மத்யமே ச ஏதேப்ய: மத்யான்ன ஏவ அதமே ஜுஹுயாத். புனச்சாக்னிம் பரிஷிச்ய அசக்த: குண்டாதக்னிம் ஸமித் யாரோப்ய லௌகீகாக்னௌ நிதாய ஜுஹுயாத்.

பொருள்: ஆஸநத்திலோ ப்ரம்மமுத்குடிகாஸனத்திலோ (அர்ச்சகன்) அமர்ந்து அக்னி குண்டத்தில் அக்னியை ஜ்வலிக்கச் செய்து, பரிசேஷணம் செய்ய வேண்டும். பெருமாளைக் குறித்து நெய்யுடன் சேர்ந்த சருவை (ஹவிசை) "அதோதேவாதி" மந்த்ரங்களைக் கூறியும் மூர்த்தி மந்த்ரங்களைச் கூறியும் ஹோமம் செய்ய வேண்டும். அந்த ஆலயத்திலுள்ள ஸ்ரீதேவி, பூதேவி, களுக்கும், பரிவார தேவதைகளுக்கும் மூன்று வேளையும் ஹோமம் செய்ய வேண்டும். இதில் பெருமாளுக்கும் ஸ்ரீதேவி, பூதேவி மற்றும் பரிவார தேவதைகளுககும் காலையும், மதியமும் ஹோமம் செய்வது உத்தம பக்ஷம், காலையில் மட்டும் ஹோமம் செய்வது மத்யம பக்ஷம். மதிய நேரத்தில் மட்டும் ஹோமம் செய்வது அதம பக்ஷமாகும். மறுபடியும் அக்னியை பரிசேஷனம் செய்து முடிக்கவேண்டும். இவை வைதீக அக்னியில் செய்ய வேண்டும். முடியவில்லையெனில் ஒரு முறை ஹோமம் செய்து அதிலிருந்து (வைதீக அக்னியில் ஹோமம் செய்த குண்டத்திலிருந்து) சமித்தை எடுத்து வைத்திருந்து அதை லௌகீகாக்னியில் சேர்த்து ஹோமம் செய்ய வேண்டும்.

शिष्यो नम्र देहः तत्तद्देशे मणिकादिद्वारपालेभ्यः श्रीभूताद्यनपायिभ्यः दिग्देवताभ्यः विमानपालेभ्यः महीभूतान्तं प्रणवादि नमोऽन्तेन तत्तन्नाम्ना पूर्वमुदकं पुष्पं बलिमुदकं च दद्यात् । तस्य दक्षिणतः भूतयक्षपिशाचनागेभ्यः बलिशेषं दद्यात् ।

சிஷ்யோ நம்ர தேஹ: தத்தத்தேசே மணிகாதித்வாரபாலேப்ய: ஸ்ரீபூதாத்யனபாயிப்ய: திக்தேவதாப்ய: விமானபாலேப்ய: மஹீபூதாந்தம் ப்ரணவாதி நமோऽந்தேன தத்தந்நாம்னா பூர்வமுதகம் புஷ்பம் பலிமுதகம் ச தத்யாத். தஸ்ய தக்ஷிணத: பூதயக்ஷபிசாசநாகேப்ய: பலிசேஷம் தத்யாத்.

பொருள்: சிஷ்யன் வணங்கிய தேஹத்துடன், அந்தந்த இடத்தில் மணிகன் முதலான த்வார தேவதைகளான ஸ்ரீபூதாதிகளின் பொருட்டுப், திக்தேவதைகளின் பொருட்டும், விமான தேவதைகளின் பொருட்டும், பலிபீடம் வரையுள்ள அனைத்து தேவதைகளையும், அந்தந்த இடத்திற்குரிய தேவதை யின் பெயருக்கு முன்பு ப்ரணவத்தையும், முடிவில் "நம:" என்ற சப்தத்தையும் கூறி (உதாரணமாக: ஓம் மணிகாய நம:) முதலில் ஜலம் சேர்த்துவிட்டுப்

புஷ்பம், பலி அன்னம், ஜலம் சேர்க்கவேண்டும். பலி பீடத்திற்குப் பலி சேர்த்து முடித்த பிறகு மீதம் உள்ளதைப் பலிபீடத்திற்குத் தென்புறம் உள்ள பூதயக்ஷபிசாச நாகாதிகளுக்குச் சேர்த்துவிடவேண்டும்.

देवेशाय "इदं विष्णुः" इति स्वादुशीतलं वारि पानीयं दत्वा, निवेदितमपनीय मण्डलं संमृज्य, तथैव आचमनं, "विचक्रम" इति मुखवासं दत्वा विधिना बलिमाराध्य, बलिबेरयुतमालय प्रदक्षिणं कारयेत् । विष्णुसूक्तेन मस्तिष्कं संपुटं प्रह्वाङ्गं, पञ्चाङ्गं, दण्डाङ्गं इति पञ्चप्रणामान् कुर्यात् ।

தேவேசாய "இதம் விஷ்ணு:" இதி ஸ்வாதுசீதலம் வாரி பானீயம் தத்வா, நிவேதிதமபனீய மண்டலம் ஸம்ருஜ்ய, ததைவ ஆசமனம், "விசக்ரம" இதி முகவாஸம் தத்வா விதினா பலிமாராத்ய, பலிபேரயுதமாலயம் ப்ரதக்ஷிணம் காரயேத் விஷ்ணுஸூக்தேன மஸ்திஷ்கம், ஸம்புடம், ப்ரஹ்வாங்கம், பஞ்சாங்கம், தண்டாங்கம் இதி பஞ்சப்ரணாமான் குர்யாத்.

பொருள்: பகவானுக்கு "இதம் விஷ்ணு:" என்ற மந்த்ரத்தைச் சொல்லி குளிர்ந்த நீர் பருக சமர்ப்பிக்கவேண்டும். நிவேதனம் செய்யப்பட்ட தளிகைகளை வேறு இடத்தில் வைத்துவிட்டு, முன்பு தளிகை நிவேதனத்திற்காக வைக்கப்பட்டிருந்த இடத்தை சுத்தம் செய்யவேண்டும். முன்போலவே ஆசமனம் சமர்ப்பிக்கவேண்டும். "விசக்ரம" எனத் தொடங்கும் மந்த்ரத்தைக் கூறி வெற்றிலை பாக்கு (தாம்பூலம்) சமர்ப்பித்துவிட்டு, முறைப்படி பலி பேரத்தை ஆராதித்து, பலிபேரத்துடன் அர்ச்சகன் கோயிலை ப்ரதக்ஷிணமாக வரவேண்டும். விஷ்ணு ஸூக்தத்தைச் சொல்லி, மஸ்திஷ்கம், ஸம்புடம், ப்ரஹ்வாங்கம், பஞ்சாங்கம், தண்டாங்கம் போன்ற ப்ரணாமங்களில் ஏதேனும் ஒரு முறைப்படி ஐந்து முறை நமஸ்கரிக்கவேண்டும்.

मस्तकेऽञ्जलौ न्यस्ते स मस्तिष्कः । हृदयेञ्जलिपुटं न्यसेत् स संपुटः । पाणी व्यत्यस्य हृदये न्यस्याऽऽनतगात्रो भवेत् स प्रह्वाङ्गः । पादाङ्गुलिभ्यां जानुभ्यां वाऽऽसीनः साञ्जलिर्भूमौ ललाटं निदध्यात् स पञ्चाङ्गः । पादौ हस्तौ प्रसार्य साञ्जलिर्भूत्वा अधोमुखो दण्डवच्छयितः स दण्डाङ्गः प्रणामः । रत्नं सुवर्णं मुखवासं वा दक्षिणां दद्यात् । पुरुषसूक्तेन एकाक्षरादिना च संस्तूय अष्टाक्षरेण पुष्पाञ्जलिं ददाति । "श्रियै जात" इति कर्पूरनीराजनं कारयेत् । "सूर्यस्त्वेति" कवाटौ बन्धयति ।

மஸ்தகேஞ்சலௌ ந்யஸ்தே ஸ மஸ்திஷ்க: ஹ்ருதயேஞ்சலி புடம் ந்யஸேத் ஸ ஸம்புட: பாணீ்வ்யத்யஸ்ய ஹ்ருதயே ந்யஸ்யா஽நதகாத்ரோ பவேத் ஸ ப்ரஹ்வாங்க: பாதாங்குலிப்யாம் வா஽஽ஸீன: ஸ அஞ்சலி:, பூமௌ

லலாடம் நிதத்யாத் ஸ பஞ்சாங்க:. பாதெள ஹஸ்தெள ப்ரஸார்ய ஸாஞ்சலிர் பூத்வா அதோமுகோ தண்டவச்சயித: ஸ தண்டாங்க: ப்ரணாம:, ரத்னம் ஸுவர்ணம் முகவாஸம் வா தக்ஷிணாம் தத்யாத். புருஷ ஸூக்தேன ஏகாக்ஷ-ராதினா ச ஸம்ஸ்தூய அஷ்டாக்ஷரேண புஷ்பாஞ்சலிம் ததாதி. ''ச்ரியைஜாத'' இதி கர்பூர நீராஜனம் காரயேத் ஸூர்யஸ்த்வேதி'' கவாடௌ பந்தயதி.

பொருள்; முன்பத்தியின் இறுதியில் பெருமாளை வணங்கும் விதம் மட்டும் சொல்லப்பட்டது. அவற்றிற்கு இங்கே விளக்கம் தரப்படுகிறது. தலைக்கு நேராக இரு கைகளையும் கூப்பி வணங்குவது "மஸ்திஷ்கம்" எனப் படும். கைகளைக் கூப்பி ஹ்ருதயத்திற்கு நேராக வைத்து நமஸ்கரிப்பது "ஸம்புடம்" எனப்படும். கைகளைக் கட்டிக்கொண்டு முகமானது ஹ்ருதயத் தைப் பார்க்குமாறு குனிந்து வணங்குவது ''ப்ரஹ்வாங்க:'' எனப்படும். பெண்கள் வணங்குவதுபோல நமஸ்கரிப்பது ''பஞ்சாங்கம்'' எனப்படும். கை கால்களை நன்கு நீட்டி தலையை உள்முகமாக வைத்துக்கொண்டு தண்டத்தை (குச்சியை)ப்போன்று விழுந்து வணங்குதல் தண்டாங்கம் எனப்படும். பிறகு பெருமாளுக்கு தக்ஷிணா தாம்பூலம் சமர்ப்பிக்கவேண்டும். புருஷஸூக்தம் அல்லது ஏகாக்ஷர ஸூக்தம் இவற்றில் ஏதாவது ஒன்றினைச் சொல்லி, பெருமாளுக்கு அஷ்டாக்ஷரத்தையும் சொல்லி புஷ்பாஞ்சலி செய்யவேண்டும். ''ச்ரியை ஜாத'' எனத்தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கற்பூர நீராஜனம் செய்யவேண்டும். ''ஸூர்யஸ்த்வா'' எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கதவுகளைப் பூட்டவேண்டும்.

मध्याह्ने, सायाह्ने च पूर्ववदुद्घाटयति । द्वाराचित पुष्पाणि व्यपोह्याऽभ्युक्ष्य, ध्रुवस्य पाद पीठेन्यस्तानि पुष्पाण्युद्धृत्य, उपरि पूर्ववत् पुष्पन्यासं कुर्यात् । निशान्ते तानि निर्माल्यानि भवन्ति । तथैव धात्रादि द्वारदेवांश्चाभ्यर्च्य, कौतुकादि बिम्बे अर्चितानि पुष्पाण्यादाय तत्पीठपार्श्वे निधाय आसनाद्यैरर्चयेत् । उत्तमे पाद्याद्यैरुपचारैरर्चयेत् । मध्यमे रात्रौ स्नानाद्यै-रुपवीतान्तैः विना अन्यैः । अधमे पाद्यार्घ्याचमनान्तैः हविषि लब्धे पाद्यादिहविरन्तैः अर्धयामे, पाद्यादिदीपान्ते हविरन्तैरित्येके । अर्धयामे पुष्पन्यासहोमबलिदानबल्युद्धरणानि न कुर्वीत ।

மத்யாஹ்னே, ஸாயான்னே ச பூர்வவதுத்காடயதி. த்வாரார்ச்சித புஷ்பாண்யபோஹ்யாப்யுக்ஷ்ய த்ருவஸ்ய பாதபீடேந்யஸ்தானி புஷ்பாண்யனு-த்ருத்ய உபரி பூர்வவத் புஷ்பந்யாஸம் குர்யாத். நிசாந்தே தானி நிர்மால்யானி பவந்தி, ததைவ தாத்ராதி த்வாரதேவாச்சாப்யர்ச்ய, கௌதுகாதி பிம்பே அர்ச்சிதானி புஷ்பாண்யாதாய தத்பீடபார்ச்வே நிதாய, ஆஸனாத்யை: அர்ச்சயேத், உத்தமே பாத்யாத்யைருபசாரைரர்ச்சயேத் மத்யமே ராத்ரௌ ஸ்நாநாத்யை: உபவீதாந்தை: வினா அந்யை: அதமே பாத்யார்க்ய

ஆசமனாந்தே ஹவிஷி லப்தே பாத்யாதி ஹவிரந்தை: அர்தயாமே பாத்யாதி தீபாந்தே ஹவிரந்தை ரித்யேகே அர்த்தயாமே புஷ்பந்யாஸ ஹோம பலிதான பல்யுத்தரணானி ந குர்வீத.

பொருள்: மதியத்திலோ, மாலையிலோ முன்போலவே கதவைத் திறக்கவேண்டும். வாயில்களில் காலையில் பூஜை செய்யப்பெற்றுள்ள புஷ்பங்களைக் களைந்துவிட்டு ப்ரோக்ஷணம் செய்து, த்ருவபேரத்தினுடைய பாத பீடத்தில் உள்ள புஷ்பங்களைக் களைந்துவிட்டு, முன்போலவே புஷ்ப ந்யாஸம் செய்யவேண்டும். எம்பெருமானின் திருமேனியில் இருக்கக்கூடிய புஷ்பங்களைக் களையக் கூடாது. ஏனெனில் இரவின் முடிவில் (காலையில்)தான் அவைகள் நிர்மால்யமாகின்றன. த்ருவ பேரார்ச்சனத்தை போலவே தாத்ராதி த்வார தேவதைகளையும் அர்ச்சிக்கவேண்டும் "கௌதுகாதி" பிம்பங்களிடத்திலும் காலை அர்ச்சித்திருக்கிற புஷ்பங்களை எடுத்து அருகில் வைத்துவிட்டு ஆஸனாதிகளை சமர்ப்பிக்க வேண்டும். உத்தமம், பாத்யம் முதலான உபசாரங்களுடன் அர்சித்தால் இரவில் ஸ்நாநம் முதல் உபவீதம் வரையுள்ள உபசாரங்களைத் தவிர மற்றவை அனைத்தும் சமர்ப்பித்து அர்ச்சிப்பது மத்யமமாகும். அதமபக்ஷமாக பாத்யார்க்ய ஆசமனம் வரை சமர்ப்பிப்பது. அர்த்தயாம பூஜையில் பாத்யம் முதலான வைகள் சமர்ப்பித்து ஹவிர் நிவேதனம் வரைச் செய்வது என்று ஒரு சிலரும், பாத்யம் முதல் தூபதீபங்கள் வரையிலும் சமர்ப்பித்து ஹவிர் நிவேதனம் செய்வது என்று ஒரு சிலரும் கருதுகின்றனர். அர்த்தயாம பூஜையில் புஷ்ப ந்யாஸம், ஹோமம், பலி சாதிப்பு போன்றவை செய்யக்கூடாது.

अन्त्यवेलायां तत्तन्मन्त्रेषु तत्तन्मूर्तिमन्त्रं संयोज्यार्चयेत् । नवषट्पञ्चमूर्तिविधाने विष्णुं आदिमूर्तिं पूर्ववदर्चयेत् । पुरुषमूर्तेः "आपोहिष्ठा" इति आचमनं, "हिरण्यगर्भ" इति अर्घ्यदानं, हविर्निवेदनञ्च । सत्यमूर्तेः "योगे योगे" इत्याचमनम् । "इदमापः शिवा" इत्यर्घ्यदानं, "इहपुष्टि" इति हविर्निवेदनञ्च । अच्युतमूर्तेः "समानेवृक्ष" इत्याचमनम्, "नारायणाय विद्महे" इत्यार्घ्यदानम्, "समाववर्ति" इति हविर्निवेदनञ्च, अनिरुद्धमूर्तेः "पवित्र" इत्याचमनम्, "कयानश्चित्र" इत्यर्घ्यदानं, "त्रीणिपदा" इति हविर्निवेदनञ्च कुर्यात् । शयानस्यादि मूर्तेरेवमन्त्रेषु तत्तन्मूर्त्तिमन्त्रं संयोजयेत् । नरनारायणनारसिंहवराहाः तत्तन्मूर्तिमन्त्रं संयोज्यार्चयेत् ध्रुवार्चनायां पूर्ववत् ध्रुवकौतुकयोः पुष्पन्यासविधानेन पुष्पन्यासं कृत्वा द्विकालमेककालं वा स्नापयित्वा अभ्यर्च्यावाहन

विसर्गौ न कुर्यात् । एष विशेषः अन्यत्सर्वं समानम् । अन्येषां देवानामर्चनेमन्त्र एव विशेषो भवतीत्याहमरीचिः ॥

॥ इति श्रीवैखानसे मरीचिप्रोक्ते विमानार्चनकल्पे नित्यार्चनविधिर्नाम एकचत्वारिंशः पटलः ॥

அந்த்ய வேலாயாம் தத்தன்மந்த்ரேஷு தத்தன் மூர்த்தி மந்த்ரம் ஸம்யோஜ்ய அர்ச்சயேத். நவஷட் பஞ்சமூர்த்தி விதானே விஷ்ணும் ஆதி மூர்த்திம் பூர்வவதர்ச்சயேத். புருஷமூர்த்தே: ''ஆபோஹிஷ்டா'' இதி ஆசமனம், ''ஹிரண்ய கர்ப'' இதி அர்க்ய தானம், ஹவிர் நிவேதனஞ்ச ஸத்ய மூர்த்தே ''யோகே யோகே'' இதி ஆசமனம். ''இதமாப:சிவா'' இத்யர்க்ய தானம் ''இஹபுஷ்டிம்'' இதி ஹவிர்நிவேதனஞ்ச் அச்யுத மூர்த்தே:'' ''ஸமானே வ்ருக்ஷ:'' இதி ஆசமனம், ''நாராயணாய வித்மஹே'' இதி அர்க்யதானம், ''ஸமாவவர்த்தி'' இதி ஹவிர் நிவேதனஞ்ச அநிருத்தமூர்த்தே: ''பவித்ர'' இதி ஆசமனம. ''சுயானச்சித்ர'' இதி அர்க்யதானம், ''த்ரீணிபதா'' இதி ஹவிர் நிவேதனஞ்ச குர்யாத். சயானஸ்யாऽऽதிமூர்த்தே: இவ மந்த்ரேஷு தத்தன் மூர்த்தி மந்த்ரம் ஸம்யோஜயேத். நரநாராயண, நாரஸிம்ஹ, வராஹா: தத்தன்மூர்த்தி மந்த்ரம் ஸம்யோஜ்யாऽர்ச்சயேத் த்ருவார்ச்சனாயாம் பூர்வவத் த்ருவ கௌதுகயோ: புஷ்பந்யாஸ விதானேன புஷ்பந்யாஸம் க்ருத்வா, த்விகாலமேககாலம் வா ஸ்நாபயித்வா அப்யர்ச்ய ஆவாஹன விஸர்கௌ ந குர்யாத். ஏஷ விசேஷ: அந்யத் ஸர்வம் ஸமானம். அந்யேஷாம் தேவானா-மர்ச்சனே மந்த்ர ஏவ விசேஷோ பவதீத்யாஹ மரீசி:

॥ இதி ஸ்ரீ வைகானஸே மரீசிப்ரோக்தே விமானார்ச்சன கல்பே
நித்யார்ச்சனவிதிர்நாம ஏகசத்வாரிம்ச: படல: ॥

பொருள் : கடைசீ (அர்த்தயாம) பூஜையில் அந்தந்த மந்த்ரங்களையும் அந்தந்த மூர்த்தி மந்த்ரங்களையும கொண்டு அர்ச்சிக்கவேண்டும். நவஷட் பஞ்சமூர்த்யர்சனா விதானத்தில் முன்கூறப்பட்டதுபோலவே விஷ்ணுவை அர்ச்சிக்கவேண்டும். புருஷமூர்த்திக்கு "ஆபோஹிஷ்டா" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஆசமனம் சமர்ப்பிக்கவேண்டும். "ஹிரண்யகர்ப" என்ற மந்த்ரத்தைச் சொல்லி அர்க்யம், ஹவிர்நிவேதனம் ஆகிய இரண்டும் சமர்ப்பிக்கவேண்டும். ஸத்யமூர்த்திக்கு "யோகே யோகே" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஆசமனம் சமர்ப்பிக்கவேண்டும். "இதமாப. சிவா"

என்ற மந்த்ரத்தைச் சொல்லி அர்க்யம் சமர்ப்பிக்க வேண்டும். "இஹ புஷ்டி" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஹவிர் நிவேதனம் செய்யவேண்டும். அச்யுதமூர்த்திக்கு "ஸமானே வ்ருக்ஷ" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச்சொல்லி ஆசமனம் சமர்ப்பிக்கவேண்டும். "நாராயணாய வித்மஹே" என்ற மந்த்ரத்தைச் சொல்லி அர்க்யம் சமர்ப்பிக்கவேண்டும். "ஸமாவவர்த்தி" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஹவிர் நிவேதனம் செய்யவேண்டும். அநிருத்தமூர்த்திக்கு "பவித்ர" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஆசமனம் சமர்ப்பிக்கவேண்டும். "கயானச்சித்ர" என்ற மந்த்ரத்தைச் சொல்லி அர்க்யம் சமர்ப்பிக்கவேண்டும். "த்ரீணிபதா" என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஹவிர் நிவேதனம் செய்ய வேண்டும். சயன பேரத்திற்கு முதல் மூர்த்தியைப் போலவே மந்திரங்களையும், அந்த மூர்த்தி மந்த்ரங்களையும் சேர்த்து அர்ச்சிக்கவேண்டும். நரநாராயணாதிகளை அவரவர்களுக்குரியமந்த்ரங்களைச் சொல்லி அர்ச்சிக்கவேண்டும். த்ருவாதிகளை அர்ச்சிக்கும்பொழுது முன் போலவே த்ருவ, கௌதுகர்களுக்கும் புஷ்பந்யாஸ விதானத்தின்படி புஷ்ப ந்யாஸம் செய்து ஒரு காலமோ, இரண்டு காலமோ ஸ்நானம் செய்வித்து, அர்ச்சித்து, ஆவாஹன, விஸர்ஜனங்கள் செய்யக்கூடாது. காலை பூஜையிலேயே ஆவாஹனம் செய்துள்ளபடியால் அர்த்தயாம பூஜையில் ஆவாஹனம் போன்றவை கிடையாது. ஆவாஹன விஸர்ஜனங்கள் கிடையாதென்பதே மற்ற பேரங்களைக் காட்டிலும் த்ருவ, கௌதுகர்களுக்கு உள்ள விசேஷம். வேறு தேவதைகளுக்கு அர்ச்சிக்க வேண்டுமாகில் மந்த்ரம் மட்டுமே வேறு (விசேஷம்) என்று மரீசி கூறுகிறார்.

இவ்வாறு ஸ்ரீவைகானஸத்தில் மரீசி ப்ரோக்தமான விமானார்ச்சன கல்பத்தில் நித்யார்ச்சனவிதி என்பதாக நாற்பத்தி ஒன்றாவது படலம் முற்றும்



काश्यप प्रोक्ते — ज्ञानकाण्डे

# ॥ नित्यार्चनविधिः ॥

காச்யப ப்ரோக்தே — ஞானகாண்டே

# நித்யார்ச்சனவிதி:

अथातो भगवतो नित्यार्चनाविधिं व्याख्यास्यामः । यथोक्तैः मन्त्रैः स्नात्वाऽऽचम्य अग्निमुपस्थाय[1] देवानृषीन् पितॄन् तर्पयित्वा ब्रह्मयज्ञं कृत्वा द्वादशभिः सूक्तैः चतुर्वेदादिमन्त्रैः स्वाध्यायं करोति ।

அதாதோ பகவதோ நித்யார்ச்சனாவிதிம் வ்யாக்யாஸ்யாம: । யதோக்தை: மந்த்ரை: ஸ்நாத்வாऽऽசம்யா ஆதித்யமுபஸ்தாய தேவாந்ருஷீன் பித்ருன் தர்பயித்வா ப்ரும்மயக்ஞம் க்ருத்வா த்வாதசபி: ஸூக்தை: சதுர்-வேதாதி மந்த்ரை: ஸ்வாத்யாயம் கரோதி ।

பொருள்: பகவானின் நித்யார்ச்சனா விதியை விவரிக்கிறேன், ஸ்நானம், ஆசமனம் ஆகியவைகளை சொல்லப்பட்ட மந்த்ரங்களனைத்தையும் சொல்லிச் செய்து, சூரிய உபஸ்தானம் செய்து, தேவ. ரிஷி, பித்ரு தர்பணங்களை முடித்துக்கொண்டு, ப்ரம்ம யக்ஞம் செய்து, த்வாதச ஸூக்தங்கள், நான்கு வேதங்கள் ஆகியவைகளை அத்யயனம் செய்யவேண்டும்,

"प्रतद्विष्णुस्तवत" इति देवालयं प्रदक्षिणं करोति । "मणिकं प्रपद्ये" इति मणिकं प्रणम्य, यन्त्रिकां "निरस्त"मित्यादाय, "हिरण्यपाणि"मिति कवाटे संयोज्य, "दिवं विवृणोतु, दिवः स्वर्ग"मिति कवाटोद्घाटनं करोति । ततोऽभ्यन्तरं प्रविश्य, "अतोदेवा" दिना देवस्यमुखं समभिवीक्ष्य, "शाम्यन्तु घोराणी"ति स्वपाणिना पाणिं त्रिःसम्प्रहार्य "भगवतो बले"नेति देवं प्रणम्य, दीपानुद्दीप्य शिष्यो "दुहतां दिव"मिति घटमादाय नदीतटाक कूपानामलाभे पूर्वस्योत्तरमुपतिष्टेत । "आघमभिगृह्य" मीत्याधावं गृह्णाति । ततो देवालयं प्रविश्य, शिरस्थमुदकुम्भं "सोमं राजान"मितिन्यसेत् ।

---

1. आदित्यमुपस्थाय — ஆதித்யமுபஸ்தாய.

अग्निः – The members of three Suryas – गार्हपत्याग्निः, आहवनीयाग्निः, दक्षिणाग्निः ।

Sanskrit — English Dictionry, S. 3420, T. M. S. S. M. Library, Thanjavur.

ப்ரதத்விஷ்ணுஸ்தவத இதி தேவாலயம் ப்ரதக்ஷிணம் கரோதி. "மணிகம் ப்ரபத்யே" இதி மணிகம் ப்ரணம்ய, யந்த்ரிகாம் "நிரஸ்த" மித்யாதாய. "ஹிரண்யபாணி"மிதி கவாடே ஸம்யோஜ்ய, திவம் விவ்ருணோது. "திவிஸ்வர்கம்" இதி கவாடோத்காடனம் கரோதி. ததோப்யந்தரம் ப்ரவிச்ய. அதோ தேவாதினா தேவஸ்ய முகம் ஸமபிவீக்ஷ்ய, "சாம்யந்துகோரா"ணிதி ஸ்வபாணினா பாணிம் த்ரி: ஸம்ப்ரஹார்ய, "பகவதோ பலே"னேதி தேவம் ப்ரணம்ய தீபானுத்தீப்ய சிஷ்யோ "துஹதாம் திவ"மிதி கடமாதாய. நதீ தடாக கூபானாமலாபே பூர்வஸ்யோத்தரமுபதிஷ்டேத. "ஆத்யமபிக்ருஹ்ணா" மீத்யாதாவம் க்ருஹ்ணாதி. ததோ தேவாலயம் ப்ரவிச்ய, சிரஸ்தமுதகும்பம் "ஸோமம் ராஜான"மிதி ந்யஸேத்.

**பொருள் :** "ப்ரதத்விஷ்ணுஸ்தவத" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கோயிலை ப்ரதக்ஷிணம் செய்யவேண்டும். "மணிகம் ப்ரபத்யே" எனத்தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி த்வாரபாலகரை வணங்கி, சாவிகளை "நிரஸ்தகும்" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி எடுத்து, "ஹிரண்ய பாணிம்" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கதவில் சேர்க்கவேண்டும் "திவம் விவ்ருணோது" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கதவைத் திறக்கவேண்டும். உள்ளே சென்று பெருமாளின் திருமுக மண்டலத்தை நன்கு தரிசித்துவிட்டு, "சாம்யந்து கோராணி" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கைகளை மும்முறை நன்கு தட்டவேண்டும். "பகவதோ பலேன" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி பெருமாளை வணங்கவேண்டும். சிஷ்யன் மூலம் தீபத்தைத் தூண்டச் செய்யவேண்டும். "துஹதாம் திவம்" என்று தொடங்கும் மந்த்ரததைச் சொல்லிக் குடத்தை எடுத்துக்கொண்டு நதி, குளம், கிணறு ஆகிய மூன்றில் ஏதாவது ஒன்றில் கிழக்கு பாகத்திலோ வடக்கு பாகத்திலோ "ஆத்யமபி க்ருஹ்ணாமி" என்ற மந்திரத்தைச் சொல்லி ஜலத்தை எடுத்துக்கொண்டு சன்னிதிக்குச் சென்று, தலையிலிருக்கும் குடத்தை "ஸோமம் ராஜானம்" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கீழே இறக்கிவைக்க வேண்டும்.

अर्चको "ब्रह्मब्रह्मान्तरात"मेति हृदयमभिमृश्य, "द्यौर्योरसि" इति शिरोऽभिमृश्य, "शिख" इति शिखोद्वर्तनं, "सकृद्देवानामायुधै"रिति सर्वत्र रक्षां कृत्वा, सुदर्शनमिति दक्षिणे हस्ते सुदर्शनं धारयति । "रविपा"मिति वामे शङ्खं च । "सूर्योऽसि" इति दक्षिणे "चन्द्रोऽसि" इति वामे च चक्षुषोः न्यस्य, हृदये बीजाक्षरं न्यस्य, हस्तयोस्तलयोः दक्षिण वामयोः सूर्याचन्द्रमसोः मण्डलं न्यस्य, "आभुरग्यं, विधिं, यज्ञं, ब्रह्माणं, देवेन्द्रं" इति अङ्गुष्ठादि कनिष्ठान्तं न्यस्य, "अन्तरसिनिम" इति ब्रह्माणं स्मरति ।

அர்ச்சகோ "ப்ரம்ம ப்ரம்மாந்தரா" த்மேதி ஹ்ருதயமபிம்ருச்ய "த்யௌர்த்யௌர" ஸீதி சிரோபி ம்ருச்ய, "சிக" இதி சிகோத்வர்த்தனம், "ஸக்ருத்தேவானாமாயுதை" ரிதி ஸர்வத்ர ரக்ஷாம் க்ருத்வா, ஸுதர்சனமிதி தக்ஷிணே ஸுதர்சனம் தாரயதி. "ரவிபா"மிதி வாமே சங்கா ச. "ஸூர்யோ-஽ஸி" இதி தக்ஷிணே, "சந்த்ரோ஽ஸி" இதி வாமே ச சக்ஷுஷோ: ந்யஸ்ய, ஹ்ருதயே பீஜாக்ஷரம் ந்யஸ்ய, ஹஸ்தயோஸ்தலயோ: தக்ஷிண வாமயோ: ஸூர்யசந்த்ரமஸோ: மண்டலம் ந்யஸ்ய, "ஆபுரண்யம், விதிம், யக்ஞம், ப்ராம்மாணம், தேவேந்த்ர" மித்யங்குஷ்டாதி கனிஷ்டாந்தம் ந்யஸ்ய, "அந்த-ரஸ்மின்னிம்" இதி ப்ரம்மாணம் ஸ்மரதி.

**பொருள் :** அர்ச்சகன் "ப்ரம்ம ப்ரம்மாந்தராத்மா" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஹருதயத்தைத் தொடவேண்டும். "சிகே" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி சிகையை தலைமுடியை)த் தொட வேண்டும். "ஸக்ருத்தேவானாமாயுதை:" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி எல்லா இடத்திற்கும் ரக்ஷையைச் செய்துகொள்ள வேண்டும். "ஸுதர்சனம்" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி வலது கையில் ஸுதர்சன முத்ரையை தரிக்கவேண்டும். "ரவிபாம்" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி இடது கையில் சங்க முத்ரையை தரிக்கவேண்டும். "ஸூர்யோ஽ஸி" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி வலது கண்ணில் ஸூர்யனையும், "சந்த்ரோ஽ஸி" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி இடது கண்ணில் சந்த்ரனையும் ந்யாஸித்து, ஹ்ருதயத்தில் பீஜாக்ஷரத்தை ந்யாஸிக்க வேண்டும். வலது இடது கைகள் இரண்டிலும் சூர்ய மண்டலத்தையும், சந்த்ரமண்டலத்தையும் ந்யாஸிக்க வேண்டும். "ஆபுரண்யம்" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கரந்யாஸம் செய்ய வேண்டும். "அந்தரஸ்மின்னிம" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ப்ரம்மனை ஸ்மரிக்க வேண்டும்.

कुशैर्वस्त्रेण वा "धारासु सप्त" स्वित्यपामुत्पवनं कृत्वा, "इदमापः शिवा" इत्यपोऽभि-मन्त्र्य "अवधूत"मिति मार्जन्या संमार्ज्य, पांस्वादीन् परिहृत्य, गोमयेनोऽपलिप्य, "आशासु सप्त" स्विति पञ्चगव्यैः प्रोक्ष्य, "नश्यन्ति जगता"मिति देवस्य निर्माल्यं शोधयित्वा "अहमेवेद"मिति पीठान्निर्माल्यमैन्द्रादीशानपर्यन्तमपोह्य, "पूतस्त" इति वेदिं परिमृज्य "नारायणाय विद्महे" इति पादपुष्पं पञ्चभिः मूर्तिभिर्दत्वा, "विष्वक्सेनं, शान्तं, हरं, अमितं" इति देवस्य निर्माल्यहारिणं भगवच्छेषैः सर्वैरर्चयेदित्याचष्टे भृगुः ।

குசைர் வஸ்த்ரேண வா "தாராஸு ஸப்த" ஸ்வித்யபாமுத்பவனம் க்ருத்வா, "இதமாப: சிவா" இத்யபோ஽பிமந்த்ர்ய, "அவதூத"மிதி மார்ஜன்யா ஸம்மார்ஜ்ய பாம்ஸ்வாதீன் பரிஹ்ருத்ய, கோமயேனோபலிப்ய,

"ஆசாஸு ஸப்த"ஸ்விதி பஞ்சகவ்யை: ப்ரோக்ஷ்ய, "நச்யந்தி ஜகதா"மிதி தேவஸ்ய நிர்மால்யம் சோதயித்வா. "அஹமேவேத"மிதி பீடான்னிர்மால்ய-மைந்த்ராதீசான பர்யந்தமபோஹ்ய, "பூதஸ்த"ஸ்யேதி வேதிம் பரிம்ருஜ்ய, "நாராயணாய வித்மஹே" இதி பாத புஷ்பம் பஞ்சபி: மூர்த்திபிர் தத்வா, "விஷ்வக்ஸேனம், சாந்தம், ஹரம், அமிதம்" இதி தேவஸ்ய நிர்மால்ய ஹாரிணம் பகவச்சேஷை ஸர்வைரர்ச்சயேதித்யா சஷ்டே ப்ருகு:

பொருள்: தர்பையோ, வஸ்த்ரமோ கொண்டு "தாராஸு ஸப்த" என்ற மந்தரத்தைச் சொல்லி ஜலத்தை வடிகட்டி நிரப்பி, "இதமாப: சிவா" என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஜலத்தை அபிமந்த்ரித்து, "அவதூாதகும்" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி கோயிலைத் துடைப்பத்தைக்கொண்டு நன்கு சுத்தம் செய்யவேண்டும். பிறகு சாணி கொண்டு மெழுகவேண்டும். "ஆசாஸு ஸப்த" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி பஞ்சகவ்யத்தினால் ப்ரோக்ஷிக்கவேண்டும். "நச்யந்தி ஜகதாம்" எனத் தொடங்கும் மந்தரத்தைச் சொல்லி நிர்மால்யங்களை (பெருமாளுக்கு முதல் நாள் சமர்ப்பித்திருந்த புஷ்பங்களை)க் களைந்து, "அஹமேவேதம்" என்ற மந்த்ரத்தைச் சொல்லி பீடத்திலுள்ள புஷ்பங்களையும் களைந்து, பூதஸ்தஸ்ய" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி வேதிகையைச் சுத்தம் செய்து "நாராயணாய வித்மஹே" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி அவைகளை பஞ்சமூர்த்திகளிடத்தில் சேர்த்து, மீதமுள்ள அனைத்தையும் விஷ்வக்ஸேனரிடம் சேர்க்கவேண்டும் என்பதாக ப்ருகு கூறுகிறார்.

"भूः प्रपद्ये" इति देवेशं नमस्कृत्य "परं रंह" इति पीठादादाय "प्रतद्विष्णुः स्तवत" इति स्नानपीठे देवं संयोज्य, "परिलिखित"मित्याम्लादिना संशोध्य, "वारीश्चतस्र" इति संस्नाप्य, "नमो वरुणः शुद्धः" इति क्षीरेणाभिषिच्य, "भूरानिलय" इति गन्धतोयैः पुनः संस्नाप्य ततः प्लोतेन विमृज्य, "भूरसि भूः प्रतिष्ठित्यै" इत्यादिना जीवस्थाने प्रतिष्ठाप्य कुशाक्षतैः [1]समं वारिभिः प्रणिधिं प्रणवेनापूर्य गायत्र्या ध्रुवस्थानं प्रोक्ष्य "संयुक्तमेत"दिति ध्रुव कौतुकयोः सम्बन्ध कूर्चं प्रक्षिपेत् ।

"பூ: ப்ரபத்யே" இதி தேவேசம் நமஸ்க்ருத்ய, "பரம் ரம்ஹ" இதி பீடாதாதாய, "ப்ரதத்விஷ்ணு: ஸ்தவத" இதி ஸ்நாந பீடே தேவம் ஸம்யோஜ்ய, "பரிலிகித" மித்யாம்லாதினா ஸம்சோத்ய "வாரீச்சதஸ்ர" இதி ஸம்ஸ்னாப்ய, "நமோ வருண: சுத்த" இதி க்ஷீரேணாபிஷிச்ய, "பூரானிலய" இதி கந்த தோயை: புந: ஸம்ஸ்னாப்ய தத: ப்லோதேன விம்ருஜ்ய "பூரஸி பூ: ப்ரதிஷ்டித்யை" இத்யாதினா ஜீவஸ்தானே ப்ரதிஷ்டாப்ய, குசாக்ஷதை: ஸமம் வாரிபி:

---

1. सह — ஸஹ

ப்ரணிதிம் ப்ரணவேனாபூர்ய காயத்ர்யா த்ருவஸ்தானம் ப்ரோக்ஷ்ய, ''ஸம்யுக்த-மேத'' திதி த்ருவ கௌதுகயோ: ஸம்பந்த கூர்ச்சம் ப்ரக்ஷிபேத்.

பொருள் : ''பூ: ப்ரபத்யே'' எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி பெருமாளை நமஸ்காரம் செய்து, ''பரம் ரம்ஹ'' எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி பெருமாளை பீடத்திலிருந்து எழுந்தருளச் செய்து, 'ப்ரதத்விஷ்ணு: ஸ்தவத'' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி ஸ்நாந' பீடத்தில் இருக்கச் செய்து, ''பரிலிகிதம்'' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி மாவிலை போன்றவற்றால் நன்கு சுத்தம் செய்து, ''வாரீச்சதஸ்ர'' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி நன்கு நீராட்டி, ''நமோ வருண: சுத்த'' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி பால் கொண்டு அபிஷேகம் செய்வித்து, ''பூராநிலய'' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி சந்தன நீரினால் நன்கு மறுபடியும் நீராட்டி, பிறகு உலர்ந்த வஸ்திரத்தைக் கொண்டு துடைத்து, பூரஸி பூ: ப்ரதிஷ்டித்யை'' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி ஏற்கனவே பெருமாள் இருந்த இடத்திற்கே எழுந்தருளச் செய்ய வேண்டும். தர்பை நுனி, அக்ஷதையுடன்கூட ப்ரணிதி பாத்ரங்களில் ப்ரணவத்தினால் நீரை நிரப்பி, காயத்ரியைச் சொல்லி த்ருவ ஸ்தானத்தை ப்ரோக்ஷித்து ''ஸம்யுக்த மேதத்'' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி த்ருவ பேரத்திற்கும், கௌதுக பேரத்திற்கும் ஸம்பந்த கூர்ச்சத்தைச் சேர்க்கவேண்டும்.

ध्रुवस्य पादयोर्मध्ये ''विष्णवे नमः'' इति प्राच्यां पुरुषाय, सत्याय दक्षिणे, प्रतीच्यां अच्युताय, अनिरुद्धायोदीच्यां, आग्नेय्यां कपिलाय, नैर्ऋत्यां यज्ञाय, वायव्यां नारायणाय, ऐशान्यं पुण्याय इति प्रथमावरणे, द्वितीयावरणे वराहाय, नारसिंहाय, वामनाय, त्रिविक्रमायेति पूर्वादि प्रदक्षिणं चतुर्दिक्षु न्यस्य, सुभद्रायेशितात्मने सर्वोद्वहाय सर्वविद्येश्वरायेत्याग्नेयादीशानपर्यन्तं न्यस्य, तृतीयावरणे इन्द्राय, यमाय, वरुणाय, कुबेरायाग्नये निर्ऋतये वायव ईशानायेति स्वेस्वेदेशे प्रणवादि नमोऽन्तं पुष्पन्यासं करोति । कर्मार्चास्थाने सुभद्राय, हयात्मकाय, रामदेवाय पुण्य-देवायेति पूर्वादि प्रदिक्षिणं चतुर्दिक्षु न्यस्य, सर्वाय, सुखावहाय, संवहाय, सुवहायेत्याग्नेयादीशान पर्यन्तं न्यस्य, शिवं, विश्वं, मित्र, अत्रिं इति पीठान्ते पश्चिमादि बहिर्मुखानर्चयित्वा, सनत्कुमारं, सनकं, सनातनं, सनन्दनमिति वायव्यादिकोणान्तेष्वर्चयित्वा, दक्षिणे मार्कण्डेयं, वामे पद्मापितरमित्य-र्घ्यान्तं पूजयित्वा, दक्षिणोत्तरयोः ब्रह्मेशानौ समभ्यर्च्य आत्मसूक्तं जपति ।

த்ருவஸ்ய பாதயோர் மத்யே ''விஷ்ணவே நம:'' இதி ப்ராச்யாம் புருஷாய, ஸத்யாய தக்ஷிணே, ப்ரதீச்யாமச்யுதாய, அநிருத்தாயோதீச்யாம், ஆக்னேய்யாம் கபிலாய, நைர்ருத்யாம் யக்ஞாய, வாயவ்யாம் நாராயணாய, ஐசான்யாம் புண்யாய இதி ப்ரதமாவரணே, த்விதீயாவரணே வராஹாய,






நாரஸிம்ஹாய, வாமனாய, த்ரிவிக்ரமாய இதி பூர்வாதி ப்ரதக்ஷிணம் சதுர்திக்ஷு ந்யஸ்ய, ஸுபத்ராயேசிதாத்மனே ஸர்வோத்வஹாய ஸர்வ வித்யேச்வராயேத்யாக்னேயாதீசான பர்யந்தம் ந்யஸ்ய, த்ருதீயாவரணே இந்த்ராய, யமாய, வருணாய, குபேராயாக்னயே, நிர்ருதயே, வாயவ, ஈசானாயேதி ஸ்வே ஸ்வே தேசே ப்ரணவாதி நமோந்தம் புஷ்ப ந்யாஸம் கரோதி. கர்மார்ச்சா ஸ்தானே ஸுபத்ராய, ஹயாத்மகாய, ராமதேவாய, புண்யதேவாயேதி பூர்வாதி ப்ரதக்ஷிணம் சதுர்திக்ஷு ந்யஸ்ய, ஸர்வாய, ஸுகாவஹாய, ஸம்வஹாய, ஸுவஹாயேத்யாக்னேயாதீசான பர்யந்தம் ந்யஸ்ய, சிவம், விச்வம், மித்ரம், அத்ரிம் இதி பீடாந்தே பச்சிமாதி பஹிர்முகானர்ச்சயித்வா, ஸனத்குமாரம், ஸனகம், ஸனாதனம், ஸனந்தனமிதி வாயவ்யாதி கோணாந்தேஷ்வர்ச்சயித்வா, தக்ஷிணே மார்க்கண்டேயம், வாமே பத்மாபிதர மித்யர்க்யாந்தம் பூஜயித்வா, தக்ஷிணோத்தரயோ: ப்ரம்மேசானௌ ஸமப்யர்ச்சய ஆத்ம ஸூக்தம் ஜபதி.

பொருள்: த்ருவ பேரத்தின் திருவடியில் "விஷ்ணவே நம:" என்று சொல்லி கிழக்கிலும், ஓம் புருஷாய நம: ஓம் ஸத்யாய நம: என்று சொல்லி தெற்கிலும், ஓம் அச்யுதாய நம: என்று சொல்லி மேற்கிலும், அநிருத்தாய நம: என்று சொல்லி வடக்கிலும், அக்னி திக்கில் ஓம் கபிலாய நம: என்றும், நிர்ருதி திக்கில் ஓம் யக்ஞாய நம: என்றும், வாயு திக்கில் ஓம் நாராயணாய நம: என்றும், ஈசான திக்கில் ஓம் புண்யாய நம: என்றும் சொல்லி முதல் சுற்றில் புஷ்ப ந்யாஸத்தைச் செய்ய வேண்டும்.

இரண்டாவது சுற்றில் கிழக்கு முதல் நான்கு திசைகளிலும் ஓம் வராஹாய நம: ஓம் நாரஸிம்ஹாய நம:. ஓம் வாமநாய நம:, ஓம் த்ரிவிக்ரமாய நம: என்று சொல்லி க்ரமமாக புஷ்பத்தைச் சேர்க்க வேண்டும் ஆக்னேயம் முதல் ஐசான்யம் வரையிலான நான்கு உபதிசைகளிலும் ஓம் ஸுபத்ராய நம:, ஓம் ஈசிதாத்மனே நம: ஓம் ஸர்வோத்வஹாய நம:, ஓம் ஸர்வ வித்யேச்வராய நம: என்று சொல்லி புஷ்ப ந்யாஸத்தைச் செய்ய வேண்டும்.

மூன்றாவது சுற்றில் ஓம் இந்த்ராய நம: ஓம் யமாய நம: ஓம் வருணாய நம:, ஓம் குபேராய நம: என்று சொல்லி நான்கு திசைகளிலும், நான்கு உபதிசைகளிலும் ஓம் அக்னயே நம:, ஓம் நிர்ருதயே நம: ஓம் வாயவே நம: ஓம் ஈசானாய நம: என்று சொல்லி அந்தந்த திசைகளுக்குரிய திக்பாலகர்களை குறித்து அவ்வவ்விடங்களில் புஷ்ப ந்யாஸத்தைச் செய்ய வேண்டும்.

அர்ச்சா ஸ்தானத்தில் ஓம் ஸுபத்ராய நம: ஓம் ஹயாத்மகாய நம:, ஓம் ராமதேவாய நம:, ஓம் புண்ய தேவாய நம: என்று கிழக்கு முதல் நான்கு திசைகளிலும். ஓம் ஸர்வாய நம:, ஓம் ஸுகாவஹாய நம:, ஓம் ஸம்வஹாய நம:, ஓம் ஸுவஹாய நம: என்று சொல்லி நான்கு உபதிசைகளிலும் புஷ்பம்

சேர்க்க வேண்டும். பீடத்தின் கடைசியில் ஓம் சிவாய நம:, ஓம் விச்வாய நம: ஓம் மித்ராய நம:, ஓம் அத்ரயே நம: என்று நான்கு திசைகளிலும் வெளிமுக மாகப் பார்த்திருக்குமாறு த்யானித்து ஓம் ஸனத்குமாராய நம:, ஓம் ஸனகாய நம:, ஓம் ஸனாதனாய நம: ஓம் ஸனந்தனாய நம: என்று சொல்லி நான்கு உப திசைகளிலும் புஷ்ப ந்யாஸத்தைச் செய்ய வேண்டும். பெருமாளுக்கு இடது பக்கத்தில் மார்க்கண்டேயரையும், வலது பக்கத்தில் ப்ருகுவையும் த்யானித்து புஷ்பம் சேர்த்து அர்க்யம் வரை உபசாரம் செய்து பூஜித்து, தெற்கிலும், வடக் கிலும், (கருவறையின் உட்புறச் சுவற்றில்) ப்ரம்மனையும் ஈசானனையும் நன்கு அர்ச்சித்து, ஆத்ம ஸூக்தத்தை ஜபிக்க வேண்டும்.

पश्चात् सुवर्णवर्णं रक्तास्यं रक्तनेत्रं सुखोद्वहं विष्णुं प्रणवात्मकं किरीट केयूर हार प्रलंब यज्ञोपवीतिनं श्रीवत्साङ्कं चतुर्भुजं शङ्खचक्रधरमेवं परमात्मानं सकलं ध्यात्वा, मनसा प्रणिध्यां निवेश्य "सुवर्भुवर्भू"रिति बिम्बस्य मूर्धानाभिपादेषु क्रमेण विन्यस्य, यकारं पादयोरन्तरे पीठे न्यस्य, हृदये बीजाक्षरं न्यस्य, त प्रणवैर्वेष्टयित्वा "इदं विष्णुरायातु भगवानि" त्यूर्ध्वं बाहुमुखः प्रणिधिमुद्धृत्य कूर्चेन तद्वारि बिम्बस्य मूर्ध्नि विष्णुमावाहयामीति संस्राव्य, प्रागादि पुरुषं, सत्यं, अच्युतं, अनिरुद्धं इत्यावाह्य दक्षिणे श्रियं, वामे हरिणीमित्यावाह्य "प्रतद्विष्णु", "अस्त्वासन"-मित्यासनं पृथक् पुष्पेण ददाति ।

பச்சாத் ஸுவர்ண வர்ணம் ரக்தாஸ்யம் ரக்த நேத்ரம் ஸுகோத்வஹம் விஷ்ணும் ப்ரணவாத்மகம் கிரீட கேயூர ஹார ப்ரலம்ப யக்ஞோபவீதினம் ஸ்ரீவத்ஸாங்கம் சதுர்புஜம் சங்க சக்ரதரமேவம் பரமாத்மானம் ஸகலம் த்யாத்வா மனஸா ப்ரணித்யாம் நிவேச்ய "ஸுவர்புவர்பூ:" இதி பிம்பஸ்ய மூர்த்தாநாபி பாதேஷு க்ரமேண விந்யஸ்ய, யகாரம் பாதயோரந்தரே பீடே ந்யஸ்ய, ஹ்ருதயே பீஜாக்ஷரம் ந்யஸ்ய, தம் ப்ரணவைர் வேஷ்டயித்வா "இதம் விஷ்ணுராயாது பகவானி" த்யூர்த்வ பாஹுமுக: ப்ரணிதிமுத்ருத்ய கூர்ச்சேன தத்வாரி பிம்பஸ்ய மூர்த்னி விஷ்ணுமாவாஹயாமீதி ஸம்ஸ்ராவ்ய ப்ராகாதி புருஷம், ஸத்யம், அச்யுதம், அநிருத்தம் இத்யாவாஹ்ய தக்ஷிணே ச்ரியம் வாமே ஹரிணீமித்யாவாஹ்ய "ப்ரதத் விஷ்ணு:" "அஸ்த்வாஸன" மித்யாஸனம் ப்ருதக் ப்ருதக் புஷ்பேண ததாதி.

பொருள் : பிறகு பகவானை தங்கத்தைப் போன்ற நிறமுள்ளவராயும், (தாமரை போன்ற) சிவந்த திருமுக மண்டலத்தையுடையவராயும், சிவந்த கண்களையுடையவராயும், கிரீடம், ஹாரம், தொங்குகின்ற முப்புரி நூலை அணிந்தவராயும், மார்பில் லக்ஷ்மியை தாங்குகின்றவராயும், நான்கு கைகள் உடையவராயும் அவற்றில் இரண்டு கைகளில் சங்கு, சக்கரம் தரித்த வராயும் த்யானித்து பிம்பத்தில் தலை, நாபி, பாதம் ஆகிய மூன்று இடங் களிலும் ஸுவ:, புவ:, பூ: என்பதாக ந்யாஸிக்க வேண்டும், யகாரத்தை

பாதங்களுக்கு இடையில் பீடத்தில் ந்யாஸிக்கவேண்டும். ஹ்ருதயத்தில் பீஜாக்ஷரத்தை ந்யாஸிக்க வேண்டும். அந்த பிம்பத்தை ப்ரணவத்தினால் சுற்றிலும் பந்தனம் செய்துவிட்டு, "இதம் விஷ்ணு:, ஆயாது பகவான்" என்று தொடங்கும் மந்திரத்தையும், ச்லோகத்தையும் சொல்லி, "விஷ்ணும் ஆவாஹயாமி" என்று ப்ரணிதி பாத்ரத்திலிருந்து ஜலத்தைக் கூர்ச்சத்தினால் எடுத்து பிம்பத்தில் ஆவாஹனம் செய்யவேண்டும். நான்கு பக்கங்களிலும் புருஷம் ஸத்யம், அச்யுதம், அநிருத்தம் ஆவாஹயாமி என்பதாக ஆவாஹனம் செய்து, எம்பெருமானுக்கு வலப்பக்கத்தில் ஸ்ரீதேவியையும், இடப்பக்கத்தில் ஹரிணீ–யையும் ஆவாஹனம் செய்து, "ப்ரதத் விஷ்ணு:", "அஸ்த்வாஸனம்" எனத் தொடங்கும் இரு மந்த்ரங்களையும் சொல்லி ஒவ்வொரு மூர்த்திக்கும் தனித் தனியே புஷ்பத்தினால் ஆஸனம் சமர்ப்பிக்கவேண்டும்.

"विश्वाधिकानां जन"नेति स्वागतं, "मनोभिमन्ते" त्यनुमानं, त्वं स्त्री"ति पाद्यमभिमृश्य, "त्रीणि पदेन्द्रोऽभिमन्ने"ति पाद्यं कूर्चेन वारि पादयोः संस्राव्य, शन्नो देवी"रिति विष्णवे, "आपोहिष्टे"ति पुरुषाय, "योगे योग" इति सत्याय, "समाने वक्ष" इत्यच्युताय, "पवित्रन्त" इत्यनिरुद्धाय आचमनं दक्षिणे हस्ते कूर्चेन ददाति । "तद्विष्णोः परमं पदं "इमाःसुमनस" इति पुष्पं, "तद्विप्रास – इमे गन्धा" इति गन्धं, "परोमात्रया", "बृहस्पति"रिति धूपं, "विष्णोः कर्माणि", "शुभ्राज्याति"रिति दीपं पृथक् पृथक् मूर्तिभिः संयोज्य ददाति । "आमा वाजस्य" इति अर्घ्यपात्राणि संशोध्य, वसिष्टं, सोमं, यज्ञाङ्गं, इन्दुं, चन्द्रं इति पात्राधिदेवमाराध्य, प्रथमं सिद्धार्थकं, द्वितीयं कुशाग्रं, तृतीयं तिलं, चतुर्थं तण्डुलं, पञ्चमं दधि, षष्टं क्षीरं, सप्तमं अक्षतं, अष्टमं तोयं इति सङ्गृह्य [1]कुडवमात्रं पृथक् पृथक् गायत्र्याक्षिप्त्वा घृतेनाभिघार्य अग्नेरिन्द्रादिना-ऽभिमृश्य, "त्रिर्देवः", "इन्द्रियाणि" इति विष्णवे, "हिरण्यगर्भ" इति पुरुषाय, "इदमापः शिवा" इति सत्याय, "नारायणाय विद्महे" इति अच्युताय, "कयानश्चित्र" इति अनिरुद्धाय अर्घ्यं निवेद्या-चमनं पूर्ववत् ददाति ।

॥ इति श्रीवैखानसे काश्यप प्रोक्ते ज्ञानकाण्डे ध्यानावाहनादि विधिर्नामैकोनसप्ततितमोऽध्यायः ॥

"விச்வாதிகானாம் ஜனனா" இதி ஸ்வாகதம், "மனோபிமந்தே" த்யனுமானம். "த்வம் ஸ்த்ரீ"தி பாத்யமபிம்ருச்ய. த்ரீணிபதேந்த்ரோபி-மந்தே"தி பாத்யம் கூர்ச்சேன வாரிபாதயோ: ஸம்ஸ்ராவ்ய "சன்னோ தேவீ" ரிதி விஷ்ணவே, "ஆபோஹிஷ்டே"தி புருஷாய, "யோக யோக" இதி

1. कुडवः — "प्रसृतौद्वावञ्जलिः स्यात्" इति वैजयन्तीकोषे ॥ (5 : 1 : 53)

குடவ: — இரண்டு கையளவு.

ஸத்யாய "ஸமானே வ்ருக்ஷ" இத்யச்யுதாய "பவித்ரந்த" இதி அநிருத்தாய ஆசமனம் தக்ஷிணே ஹஸ்தே கூர்ச்சேன ததாதி "தத்விஷ்ணோ: பரமம் பதம்", இமாஸ்ஸுமனஸ:" இதி புஷ்பம். "தத்விப்ராஸ, இமேகந்தா" இதி கந்தம், "பரோமாத்ரயா, ப்ருஹஸ்பதி"ரிதி தூபம். "விஷ்ணோ: கர்மாணி" "சுப்ராஜ்யேதி:" இதி தீபம் ப்ருதக் ப்ருதக் மூர்த்திபி: ஸம்யோஜ்ய ததாதி ஆமாவாஜஸ்ய இதி அர்க்ய பாத்ராணி ஸம்சோத்ய, வஸிஷ்டப., ஸோமம், யக்ஞாங்கம், இந்தும், சந்த்ரம் இதி பாத்ராதிதேவமாராத்ய. ப்ரதமம் ஸித்தார்த்தகம், த்விதீயம் குசாக்ரம், த்ருதியம் திலா், சதுர்த்தம் தண்டுலம், பஞ்சமம் ததி, ஷஷ்டகம் க்ஷீரம், ஸப்தமம் அக்ஷதம். அஷ்டமம் தோயம் இதி ஸங்க்ருஹ்ய குடுவமாத்ரம் ப்ருதக் ப்ருதக் காயத்ர்யா க்ஷிப்த்வா க்ருதேனாபி-கார்யா அக்னேரிந்த்ராதிநாடபிம்ருச்ய "த்ரிர்தேவ:." "இந்த்ரியாணீ"தி விஷ்ணவே. "ஹிரண்யகர்ப" இதி புருஷாய, "இதமாப: சிவா" இதி ஸத்யாய நாராயணாய வித்மஹே" இத்யச்யுதாய. "கயானச்சித்ர" இதி அநிருத்தாய அர்க்யம் நிவேத்ய, ஆசமனம் பூர்வவத் ததாதி.

இதி ஸ்ரீவைகானஸே காச்யப ப்ரோக்தே ஞானகாண்டே.
த்யானாவாஹனாதி விதிர்நாம ஏகோனஸப்ததிதமோத்யாய:

"விச்வாதிகானாம்" என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லிப் பகவானுக்கு நல்வரவு நல்கவேண்டும். "மநோபிமந்தா" என்ற மந்திரத்தைச் சொல்லி அனுமதி பெறவேண்டும். "த்வம் ஸ்த்ரீ" என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி பாத்ய பாத்திரத்தைத் தொட்டு, "த்ரீணிபதா", "இந்த்ரோபிமந்தா" என்று தொடங்கும இரண்டு மந்திரங்களையுமகூறி பாத்ய ஜலத்தினை கூர்ச்சத்தினால் எடுத்து எம்பெருமானுடைய திருவடிகளில் ப்ரோக்ஷிக்கவேண்டும். "சன்னோதேவீ:" என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி விஷ்ணுமூர்த்திக்கும், "ஆபோஹிஷ்டா" என்று தொடங்கும் மந்திரத்தை சொல்லி புருஷமூர்த்திக்கும், "யோகே யோகே" எனத்தொடங்கும் மந்திரத்தை சொல்லி ஸத்யமூர்த்திக்கும், "ஸமானே வ்ருக்ஷ" எனத்தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி அச்யுதமூர்த்திக்கும், "பவித்ரந்த" எனத்தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி அநிருத்தமூர்த்திக்கும். (அந்தந்த மூர்த்திகளுடைய) அவர்களுடைய வலக்கையில் ஆசமன தீர்த்தத்தை கூர்ச்சத்தினால் சமர்ப்பிக்க வேண்டும். "தத்விஷ்ணோ: பரமம் பதம்", "இமாஸ்ஸுமனஸ" என்று தொடங்கும் இரு மந்திரங்களையும் சொல்லி புஷ்பத்தினையும், "தத்விப்ராஸ" "இமே கந்தா" என்று தொடங்கும் இருமந்திரங்களையும் சொல்லி சந்தனம் முதலான வாசனைத் திரவியங்களையும், "பரோமாத்ரயா", "ப்ருஹஸ்பதி:" என்று தொடங்கும் இரு மந்திரங்களையும் சொல்லி தூபத்தினையும், "விஷ்ணோ: கர்மாணி", "சுப்ராஜ்யோதி:" என்று தொடங்கும் இருமந்திரங்களையும் சொல்லி தீபத்தினையும் தனித்தனியே ஒவ்வொரு மூர்த்திகளின்

பெயருடனும் சேர்த்து சமர்ப்பிக்க வேண்டும். "ஆமாவாஜஸ்ய" என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி அர்க்ய பாத்திரங்களைச் சுத்தம் செய்து வஸிஷ்டம், ஸோமம், யக்ஞாங்கம், இந்தும், சந்த்ரம் என்பதான அர்க்யாதி பாத்திரங்களின் அதிதேவதைகளை ஆவாஹனம் செய்து. வெண்கடுகு முதலிய த்ரவ்யங்களை இரண்டு கையளவு சேகரித்து, (முதலில் வெண்கடுகு, இரண்டாவதாக தர்பை நுனி, மூன்றாவதாக எள், நான்காவதாக அரிசி, ஐந்தாவதாக தயிர், ஆறாவதாக பால், ஏழாவதாக அக்ஷதை, எட்டாவதாக ஜலம்) அவைகளை காயத்ரீ மந்த்ரங்களைச் சொல்லி அர்க்யாதி பாத்திரங்களில் சேர்க்க வேண்டும். பிறகு நெய்யினால் சுத்தம் செய்து, "அக்னிரிந்த்ரா" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி அபிமந்த்ரித்து "த்ரிர்தேவ", "இந்த்ரியாணீ" என்று தொடங்கும் இரு மந்த்ரங்களையும் சொல்லி விஷ்ணுமூர்த்திக்கும், "ஹிரண்யகர்ப" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி புருஷமூர்த்திக்கும், "இதமாப: சிவா" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி ஸத்யமூர்த்திக்கும், "நாராயணாய வித்மஹே" எனத் தொடங்கும் மந்திரத்தை சொல்லி அச்யுதமூர்த்திக்கும், "கபானச்சித்ர" எனத் தொடங்கும் மந்த்ரத்தை சொல்லி அநிருத்தமூர்த்திக்கும் அர்க்யம் சமர்ப்பித்து ஆசமனம் முன்போலவே சமர்ப்பிக்கவேண்டும்.

இவ்வாறு ஸ்ரீவைகானஸத்தில் காச்யபரால் கூறப்பட்ட ஞானகாண்டத்தில் த்யான ஆவாஹன விதி என்பதாக 69 ஆவது அத்யாயம் முற்றும்.

---

## ॥ अथ सप्ततितमोऽध्यायः ॥

### அத ஸப்ததிதமோऽத்யாய:

'इषेत्वोर्जेत्वा' इति मन्त्रस्नानं, 'मित्रस्सुवर्ण' इति प्लोतं, तेजोवत्सव' इति वस्त्रं, 'सोमस्य तनूर'सीति उत्तरीयम् । 'भूतो भूते'ष्वित्याभरणं 'अग्नि दूत'मित्युपवीतं, पञ्चभ्यो मूर्तिभ्यः संयोज्य ददाति । पूर्ववत् पाद्याचमन पुष्प, गन्ध, धूपदीपान् दत्वा, 'अथावनीतं' इति मण्डलं करोति ।

"இஷேத்வோர்ஜேத்வா" இதி மந்த்ர ஸ்நானம். "மித்ரஸ்ஸுவர்ண" இதி ப்லோதம், "தேஜோ வத்ஸவ" இதி வஸ்த்ரம், "ஸோமஸ்ய தனூர"ஸீதி உத்தரீயம். "பூதோ பூதே"ஷ்வித்யாபரணம். "அக்னிந்தூத"மித்யுபவீதம், பஞ்சப்யோ மூர்த்திப்ய: ஸம்யோஜ்ய ததாதி. பூர்வவத் பாத்யாசமன புஷ்ப கந்த தூபதீபான் தத்வா, "அதாவனீதம்" இதி மண்டலம் கரோதி.

## எழுபதாவது அத்யாயம்

**பொருள் :** "இஷேத்வோர்ஜேத்வா" எனத் தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி மந்த்ர ஸ்நானம் சமர்ப்பிக்கவேண்டும் மித்ரஸ்ஸுவர்ண" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி (ப்லோதம்) உலர்ந்த வஸ்த்ரத்தால் பகவானைத் துடைக்கவேண்டும். "தேஜோவத்ஸவ' என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி வஸ்த்ரம் சமர்ப்பிக்கவேண்டும். "ஸோமஸ்ய தனூரஸி" என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி உத்தரீயம் சமர்ப்பிக்க வேண்டும். "பூதோ பூதேஷு" என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி ஆபரணம் சமர்ப்பிக்கவேண்டும். "அக்னிந்தூதம்" என்று தொடங்கும மந்த்ரத்தைச் சொல்லி உபவீதம் (முப்புரி நூல்) சமர்ப்பிக்கவேண்டும். இவ்வாறு அனைத்தையும் அந்தந்த மூர்த்திகளின் பெயருடன் சேர்த்து சமர்ப்பிக்கவேண்டும். முன்போலவே பாத்யம், ஆசமனம், புஷ்பம், கந்தம், தூபம், தீபம் ஆகியவை சமர்ப்பித்து. 'அதாவனீதம்' எனத் தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி மண்டலம் சேர்க்கவேண்டும்.

तथा हविः पात्राणि संशोध्य आदित्यं, भास्करं, सूर्यं, मार्ताण्डं विवस्वन्तमिति पात्राधिदेवमाराध्य, पुष्पादीन् संशोध्य, 'देवस्यत्वे' त्याज्येनाभिघार्य, पात्रेषु अमृतोऽपस्तरणमसि' इति हवींषि प्रक्षिप्य, अथ फलगुडोपदंशादान् गायत्र्या क्षिप्त्वा, अन्नसूक्तेनऽभिमृश्य 'यत्ते सुसीम' इति घृतमास्राव्य, 'सुभूः स्वयम्भूः' इति विष्णवे सर्वं हविर्निवेद्य, 'हिरण्यगर्भ' इति पुरुषाय पायसं, 'इह पुष्टि' इति सत्याय कृसरं, 'समाववर्ती'त्यच्युताय गौल्य, 'त्रीणि पदा' इत्यनिरुद्धाय यावक हविः निवेद्य, देवीभ्यां ऋषिभ्यां निवेद्य अग्निं परिषिच्य अतोदेवादिना हुत्वा, आलय गतेभ्यः देवेभ्यः चतसृभिः मूर्तिभिर्हुत्वा, अग्निं विसृज्य, द्वारपालेभ्यः, विमानपालेभ्यः, लोकपालेभ्योऽनपायिभ्यः तत्तन्नाम्ना प्रणवादि नमोऽन्तं पुष्पान्नयुत बलिं तत्तत्प्रदेशे क्षिप्त्वा बलिशेष पीठस्य दक्षिणे पार्श्वे 'भूतयक्षपिशाच नागेभ्यो बलिन्निर्वपामी'ति निर्वाप्य आचम्य 'इदं विष्णु'रेति पानीयं दत्वा आचमनं पूर्ववद्ददाति ।

*ததா ஹவி: பாத்ராணி ஸம்சோத்ய ஆதித்யம், பாஸ்கரம் ஸூர்யம், மார்த்தாண்டம், விவஸ்வந்தமிதி பாத்ராதிதேவமாராத்ய, புஷ்பாதீன் ஸம்சோத்ய "தேவஸ்யத்வே" த்யாஜ்யேன அபிகார்ய, பாத்ரேஷு "அம்ருதோபஸ்தரணம"ஸீதி ஹவிம்ஷி ப்ரக்ஷிப்ய, அத பலகுடோபதப்சாதீன் காயத்ர்யா க்ஷிப்த்வா அன்னஸூக்தேனாऽபிம்ருச்ய, "யத்தே ஸுஸீம" இதி க்ருதமாஸ்ராவ்ய, "ஸுபூ: ஸ்வயம்பூ:" இதி விஷ்ணவே ஸர்வம் ஹவிர் நிவேத்ய "ஹிரண்யகர்ப" இதி புருஷாய பாயஸம், இஹபுஷ்டி"மிதி ஸத்யாய க்ருஸரம், "ஸமாவவர்த்தி" இத்யச்யுதாய கௌள்யம், "தரீணிபதே" இதி அநிருத்தாய*

யாவகம் ஹவி: நிவேத்ய தேவீப்யாம், ரிஷிப்யாம் நிவேத்ய, அக்னிம் பரிஷிச்ய, அதோ தேவாதினா ஹுத்வா ஆலய கதேப்ய: தேவேப்ய: சதஸ்ருபி: மூர்த்திபி: ஹுத்வா, அக்னிம் விஸ்ருஜ்ய த்வார பாலேப்ய: விமானபாலேப்ய: லோக-பாலேப்யோऽநபாயிப்ய: தத்தந்நாம்னா ப்ரணவாதி நமோந்தம் புஷ்பான்ன-யுதம் பலிம் தத்தத் ப்ரதேசே க்ஷிப்த்வா பலிசேஷம் பீடஸ்ய தக்ஷிணேபார்ச்வே "பூதயக்ஷ பிசாச நாகேப்யோ பலிம் நிர்வபாமி" இதி நிர்வாப்ய ஆசம்ய "இதம் விஷ்ணு" ரிதி பாநீயம் தத்வா ஆசமனம் பூர்வவத் ததாதி.

பொருள் ; அவ்வாறே ஹவிர் நிவேதனைத்தைச் சேர்க்கும் பாத்திரங்களை சுத்தம் செய்து, அப்பாத்திரத்தின் அதிதேவதையான ஆதித்யம், பாஸ்கரம், சூர்யம், மார்த்தாண்டம், விவஸ்வந்தம் என்ற நாமாவளிகளைச் சொல்லி ஆவாஹனம் செய்து புஷ்பங்களினால் ஆராதித்து, தேவஸ்யத்வா" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி நெய்யை அப்பாத்திரத்தில் அபிகாரம் செய்து, அம்ருதோபஸ்தரணமஸி" என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஹவிஸைச் சேர்த்து, பிறகு பழம், வெல்லம் உபதம்சம் முதலானவைகளைச் சேர்த்து, "அன்ன ஸூக்தம்" சொல்லி அபிமந்த்ரித்து "யத்தே ஸுஸீம" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி விஷ்ணுவுக்கு ஹவிஸுக்களனைத்தையும் நிவேதனம் செய்து, "ஹிரண்யகர்ப" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி புருஷ மூர்த்திக்கு பாயஸத்தையும், "இஹ புஷ்டிம்" என்ற மந்த்ரத்தைச் சொல்லி ஸத்யமூர்த்திக்கு க்ருஸரத்தையும், "ஸமாவவர்த்தி" எனத்தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி அச்யுத மூர்த்திக்கு கௌல்யத்தையும், "த்ரீணிபதா" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி யவதான்யத்தாலான ஹவிஸை அநிருத்த மூர்த்திக்கும் ஹவிர் நிவேதனம் செய்யவேண்டும். விஷ்ணுமூர்த்தியைப்போன்று ஸ்ரீதேவி, பூதேவிகளுக்கும், ரிஷிகளுக்கும் ஹவிர் நிவேதனம் செய்ய வேண்டும். பிறகு அக்னிக்கு பரிசேஷனம் செய்து, "அதோ தேவா" என்று தொடங்கும் மந்த்ரங்களினால் ஹோமம் செய்து, ஆலயத்திலுள்ள ஒவ்வொரு தேவதைகளுக்கும் உரிய நான்கு நாமாவளிகளைச் சொல்லி ஹோமம் செய்து, அக்னிக்கு பரிசேஷனம் செய்து முடித்துவிட்டு, த்வாரபாலகர்கள், விமான பாலகர்கள், லோகபாலகர்கள் அனபாயிகள் ஆகிய அனைவருக்கும் அந்தந்த பெயருடன் ப்ரணவத்தை முதலிலும் இறுதியில் "நம:" என்றும் சேர்த்து பலியை அந்தந்த இடத்தில் சேர்க்கவேண்டும். பலி சேர்த்து முடிந்த பிறகு மீதமுள்ளதை பலிபீடத்திற்கு தெற்குப் புறத்தில் "பூத, யக்ஷ, பிசாச, நாகேப்ய: பலிம் நிர்வபாமி" என்று கூறி சேர்த்துவிட்டு ஆசமனம் செய்ய வேண்டும். பிறகு "இதம் விஷ்ணு:" என்று தொடங்கும் மந்த்ரத்தைச் சொல்லி பாநீயம் சமர்ப்பித்து, முன்போலவே பெருமாளுக்கு ஆசமனம் சமர்ப்பிக்க வேண்டும்.

'घृतात्परी'ति मुखवासं प्रदाय विधिना बलिमाराध्य प्रदक्षिणं कारयति । मस्तिष्कं, संपुटं, प्रह्वाङ्गं, पञ्चाङ्गं दण्डाङ्गमिति पञ्चभिः प्रकारैः विष्णुसूक्तेनप्रणम्य विष्णु गायत्र्या पुष्पाञ्जलिं ददाति । प्रणवेन यथाशक्ति दक्षिणां दत्वा, द्वादशाक्षरेणाष्टाक्षरेण प्रणम्य, प्राणायामं जप्त्वा देवं बेरे समारोपयेदन्त्यवेलायामिति विज्ञायते ॥

॥ इति श्रीवैखानसे काश्यपप्रोक्ते ज्ञानकाण्डे नित्यार्चनविधानं नाम सप्ततितमोऽध्यायः ॥

"க்ருதாத்பரீ" இதி முகவாஸம் ப்ரதாய, விதினா பலிமாராத்ய ப்ரதக்ஷிணம் காரயதி. மஸ்திஷ்கம், ஸம்புடம், பிரஹ்வாங்கம், பஞ்சாங்கம், தண்டாங்கம் இதி பஞ்சபி: ப்ரகாரை: விஷ்ணுஸூக்தேனப்ரணம்ய விஷ்ணு காயத்ர்யா புஷ்பாஞ்சலிம் ததாதி. ப்ரணவேன யதா சக்தி தக்ஷிணாம் தத்வா த்வாதசாக்ஷரேணாஷ்டாக்ஷரேண ப்ரணம்ய ப்ராணாயாமம் ஜப்த்வா தேவம் பேரே ஸமாரோபயேதந்த்யவேளாயாமிதி விக்ஞாயதே.

இதி ஸ்ரீவைகானஸே காச்யப ப்ரோக்தே ஞான காண்டே நித்யார்ச்சனா விதானம் நாம ஸப்ததிதமோஉத்யாய:

பொருள் : "க்ருதாத்பரீ" என்று தொடங்கும் மந்திரத்தைச் சொல்லி பெருமாளுக்கு வெற்றிலை பாக்கு சமர்ப்பிக்க வேண்டும். விதிப்படி பலி பேரத்தை ஆராதித்து கோவிலை ப்ரதக்ஷிணமாக எழுந்தருளச் செய்ய வேண்டும். மஸ்திஷ்கம், ஸம்புடம், ப்ரஹ்வாங்கம், பஞ்சாங்கம், தண்டாங்கம் என்பதாக உள்ள ஐந்துவித நமஸ்காரங்களில் ஏதேனும் ஒன்றை விஷ்ணு ஸூக்தத்தைச் சொல்லி நமஸ்காரம் செய்து, விஷ்ணு காயத்ரியைச் சொல்லி புஷ்பாஞ்சலி செய்ய வேண்டும், ப்ரணவத்தைச் சொல்லி எவ்வளவு முடியுமோ அவ்வளவு தக்ஷிணை பெருமாளுக்கு சமர்ப்பித்து, த்வாதச, அஷ்டாக்ஷரத்தைச் சொல்லி பெருமாளை நமஸ்கரிக்க வேண்டும். கடைசீ வேளையில் ப்ராணாயாமம் செய்து (ஸங்கல்பித்து) பெருமாளை த்ருவபேரத்தில் ஸமாரோபனம் செய்ய வேண்டும்.

இவ்வாறு ஸ்ரீவைகானஸத்தில் காச்யபரால் கூறப்பட்ட ஞான காண்டத்தில் நித்யார்ச்சன விதானம் என்பதாக 70 வது அத்யாயம் முற்றும்.

भृगु संहितायां — समूर्तार्चनाधिकरणे

## ॥ नित्यार्चनविधौ विशेषांशाः ॥

ப்ருகு ஸம்ஹிதாயாம் ஸமூர்த்தார்ச்சனாதிகரணே

## நித்யார்ச்சனவிதௌ விசேஷாம்சா:

साकारञ्च निराकारं हरेराराधनं द्विधा ।
(प्रतिमाराधनं मुख्यं साकारमभिधीयते ।)
आराधनं निराकारमतः साकारमुत्तमम् ।
साकारं तद्विधाप्रोक्तं नित्यं नैमित्तिकन्त्विति ॥

ஸாகாரஞ்ச நிராகாரம் ஹரேராராதனம் த்விதா ।
ப்ரதிமாராதனம் முக்யம் ஸாகாரமபிதீயதே ।)
ஆராதனம் நிராகாரமத: ஸாகார முத்தமம் ।
ஸாகாரம் தத்விதா ப்ரோக்தம் நித்யம் நைமித்திகந்த்விதி ॥

பொருள் : நித்ய பூஜையானது உருவ வழிபாடு, அருவ வழிபாடு என இருவகைப்படும். இவ்விரண்டு முறைகளுள் விக்ரஹம் வைத்து வழிபடும் முறையான உருவ வழிபாடு மிக முக்கியமானதாகும். இம்முறையினையே "ஸாகாரம்" என்று மேலே சொல்லப்பட்டுள்ளது. "ஸாகார"மும் நித்யம், நைமித்திகம் என்பதாக இரு வகைப்படும்.

## ॥ कौतुकादीनां स्थानम् ॥

कौतुकं ब्रह्मणः स्थाने स्थापितं सम्यगर्चयेत् ॥
दक्षिणोत्तरयोस्तस्य पूजयेत्स्नापनोत्सवौ ।
औत्सवस्नापने वाऽथ स्थापयेदिति केचन ॥
उत्तरे कौतुकस्यैव बलिबेरं समर्चयेत् ।
यथा कर्मण एकस्यकल्पिताः पञ्चवह्नयः ॥
यथा चैकशरीरस्य वायुपञ्चक कल्पनम् ।
तथैवैक विमानस्य पञ्चबेराणि कल्पयेत् ॥

अथवा त्रीणि बेराणि यथा त्रेताग्निकल्पनम् ।
ध्रुवार्चाबेरमेकञ्च बलिबेरमथौत्सवम् ॥
ध्रुवार्चामेकबेरन्तु कुर्यादौपासनाग्निवत् ।
गर्भालयस्य सङ्कोचेत्त्वथवा मुखमण्डपे ।
अन्तरालेऽथवा स्थाप्य पूजयेदिति केचन ॥

## கௌதுகாதீனாம் ஸ்தானம்

கௌதுகம் ப்ரம்மண:ஸ்தானே ஸ்தாபிதம் ஸம்யகர்ச்சயேத் ॥
தக்ஷிணோத்தரயோஸ்தஸ்ய பூஜயேத் ஸ்நாபனோத்ஸவௌ ।
ஔத்ஸவ ஸ்நாபனே வாऽத ஸ்தாபயேதிதி கேசன ॥

உத்தரே கௌதுகஸ்யைவ பலிபேரம் ஸமர்ச்சயேத் ।
யதா கர்மண ஏகஸ்ய கல்பிதா: பஞ்சவஹ்நய ॥

யதா சைகசரீரஸ்ய வாயுபஞ்சக கல்பனம் ।
ததைவைக விமானஸ்ய பஞ்சபேராணி கல்பயேத் ॥

அதவா த்ரீணி பேராணி யதா த்ரேதாக்னி கல்பனம் ।
த்ருவார்ச்சாபேரமேகஞ்ச பலிபேர மதௌத்ஸவம் ॥

த்ருவார்ச்சாமேகபேரந்து குர்யாதௌபாஸனாக்னிவத் ।
கர்பாலயஸ்ய ஸங்கோசேத்வதவா முகமண்டபே ॥
அந்தராளேऽதவா ஸ்தாப்ய பூஜயேதிதி கேசன ।

## கௌதுகர் முதலான மூர்த்திகளை பூஜைக்காக வைக்கும் இடம்

**பொருள் :** கௌதுகர் முதலான மூர்த்திகளை த்ருவபேரத்தை மையமாக வைத்து உரிய இடத்தில் ஸ்தாபிக்க வேண்டும். கௌதுகரை ப்ரம்மண ஸ்தானத்தில் எழுந்தருளச் செய்யவேண்டும். ஸ்நபன பேரத்தையும், உத்ஸவ பேரத்தையும் தெற்குப் பகுதியிலும், வடக்குப் பகுதியிலும் எழுந்தருளச் செய்யவேண்டும். உத்ஸவ பேரத்தைத் தெற்குப் பகுதியிலும், ஸ்நபன பேரத்தை வடக்குப் பகுதியிலும் எழுந்தருளச் செய்யலாம் என்பது சிலரபிப்ராயம். கௌதுக பேரத்திற்கு வடக்குப் பகுதியில் பலிபேரத்தை எழுந்தருளச் செய்யவேண்டும். மேற்சொன்ன இடங்களில் மூர்த்தங்களை எழுந்தருளச்செய்து நன்கு (பூஜிக்க) அர்ச்சிக்கவேண்டும்.

இங்கு ஒரு விசேஷ விஷயமாக "ஏன் ஐந்து மூர்த்தங்களை எழுந்தருளச் செய்து அர்ச்சிக்கவேண்டும்?" என்பதற்கு சாஸ்த்ர விளக்கம் தரப்படுகிறது.

எவ்வாறு ஒரு கார்யத்திற்கு ஐந்து அக்னியானது கல்பிக்கப் படுகிறதோ, எவ்வாறு வாயு முதலான (பஞ்ச பூதங்களின்) ஐம்பூதங்களின் சேர்க்கைதான் ஒரு சரீரமாக ஆக்கப்படுகிறதோ (கல்பிக்கப்படுகிறதோ) அவ்வாறு ஒரே கோவிலில் ஐந்து பேரங்கள் கல்பிக்கப்படுகிறது,

ஒரு கார்யத்தின் பொருட்டு ஐந்து அக்னியை கல்பிக்க முடியாதவர்கள் மூன்று அக்னியை கல்பிப்பதுபோல, த்ருவபேரம், உத்ஸவபேரம், பலிபேரம் ஆகிய மூன்று பேரங்களையும் (மூர்த்தங்களையும்) எழுந்தருளச் செய்து அர்ச்சிக்கலாம்.

மூன்று அக்னி கல்பனமும் செய்யமுடியாதவர்கள் ஏகாக்னி பக்ஷமாக ஔபாஸனாக்னியை மட்டும் செய்வதுபோல, த்ருவ பேரத்தை மட்டும் எழுந்தருளச் செய்து அர்ச்சிக்கலாம்.

கர்பக்கிரஹமானது (கருவறை) சிறியதாக இருப்பின் மூன்மண்டபத் திலோ, அர்த்தமண்டபத்திலோ எழுந்தருளச்செய்து (பஞ்ச மூர்த்திகளை) அர்ச்சிக்கலாம் என்பது சிலரபிப்ராயம்.

## ॥ ध्रुवार्चन विशेषः ॥

पुष्पन्यासावसानाय स्याद् ध्रुवबेरार्चनामता ॥
अनर्च्यं ध्रुवबेरं तज्जल पुष्पानुलेपनैः ।
निष्कलं तन्निरालम्बं केवलामुष्मिकप्रदम् ॥

### த்ருவார்ச்சன விசேஷ:

புஷ்பந்யாஸாவஸானா ஸ்யாத் த்ருவபேரார்ச்சனாமதா ॥
அனர்ச்யம் த்ருவபேரம்தஜ்ஜல புஷ்பாநுலேபனை: ।
நிஷ்கலம் தந்நிராலம்பம் கேவலாமுஷ்மிக ப்ரதம் ॥

புஷ்பந்யாஸம் வரை அர்ச்சித்து த்ருவபேர பூஜையானது சொல்லப்படு கிறது. த்ருவபேரத்தை ஜலம், புஷ்பம், சந்தனம் முதலானவைகளினாலேயே (மானஸிகமாக) பூஜை செய்யலாம். இம்முறைதான் நிராலம்பார்ச்சனம் எனப்படுகிறது. அது மோக்ஷபலனை மட்டும் அளிக்கும்.

## ॥ कौतुकाद्यर्चन विशेषः ॥

सालम्बं सगुणं श्रेष्ठं सकलं कौतुकार्चनम् ।
सकामानां समुचितं संसाराश्रमिणामिदम् ॥

